விலை குறைக்கவேண்டுமென்று சொல்வதற்கும், விவசாயத்திற்கான செலவைக் குறைக்கவேண்டுமென்று சொல்வதற்கும் சம்பந்தம் இல்லை என்று சொல்கிறேன்.

SRI R. SWAMINATHA MERKONDAR: தலைவர் அவர்களே, தஞ்சை ஜில்லாவிலே பெரும்பாலான விவசாயிகள் நெல்லை விற்றுத் தான் தங்களுக்கு வேண்டிய இதர சாமான்களை வாங்கும் நிலையில் இருக்கிறார்கள். இதர சாமான்களின் விலை உயர்வைத் தடுக்க அரசாங்கம் முன் வருமா என்று அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இப்போது முக்கியமான முதல் பிரச்னை உணவு தானிய விலை ஏற்றத்தைத் தடுப்பதுதான். மற்ற சாமான்களின் விலையேற்றத்தைத் தடுக்க பிறகு தான் நடவடிக்கை எடுக்க வேண்டும். உணவு தானிய விலையேற்றத்தைத் தடுப்பதில் தான் முதலில் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது.

SRI V. SUBBIAH: இன்றைய விலைவாசிகளை எடுத்துக்கொண்டால், குறிப்பாக இரும்பு விலையை எடுத்துக் கொண்டால், 6 அணுவாக இருந்த கொழு 2 ரூபாயாக விற்கப்படுகிறது. 10 அணுவாக இருந்த மண்வெட்டி 3 ரூபாயாக விற்கப்படுகிறது. வண்டிக் கட்டு 7 ரூபாயாக இருந்தது, இப்பொழுது 70 ரூபாயாக விற்கப்படுகிறது. இதை எல்லாம் அரசாங்கம் கவனித்து விவசாயிகளுக்கு இவைகள் நியாயமான விலையில் கிடைப்பதற்கு அரசாங்கம் முயற்சி செய்யுமா ? விவசாய இரும்புக் கோட்டாவை அதிகப்படுத்தி நல்ல முறையில் வினியோகிக்க வேண்டுமென கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் அங்கத்தினர் கூறுவது உண்மைதான். இருந்தாலும் உணவு தான்யங்களின் விலையைக் குறைக்கவேண்டுமென்கிற அவசியத்தை மறுக்கமாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

## *Medicinal plants*

* 790-I *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY: கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா:—

சித்த-யூனானி-வைத்தியங்களுக் குகந்த உயர்ந்த பச்சிலைகள் பயிரிட அரசாங்கத்தார் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU: The required plants are cultivated in the Medical Farm at Arumbakkam and also in a small garden in the compound of the College of Integrated Medicine.

SRI K. SATTANATHA KARAYALAR: சப்தகிரந்தா, அமிருத கிரந்தா போன்ற மூலிகைகளை, இரத்த அழுத்தத்திற்காக பென்சிலின் போன்ற anti-biotics-களுக்குப் பதிலாக உபயோகப் படுத்தலாமென்று மத்திய ஆராய்ச்சிக் கழகம் சிபார்சு செய்திருக்கிறது. ஆகவே, இவைகளைப் பயிரிடுவதற்குத் திட்டம் இருக்கிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: அவைகளையும் பயிர் செய்துக் கொண்டுதான் வருகிறோம். காட்டு இலாக்காவினரும் மற்ற இலாக்காவினரும் பயிர் செய்கிறார்கள்.

SRI M. D. THIAGARAJA PILLAI: சித்த வைத்தியம், யூனானி வைத்தியம் இவைகளுக்கு மூலிகைகள் முக்கியமானதாக இருப்பதனாலும், இவைகள் பயிரிடுவது குறைவாக இருப்பதனாலும், இது சம்பந்தமாக

[1st November 1958

அரசாங்கம் ஒரு உத்தியோகஸ்தரை நியமித்து, அறிக்கை சமர்பிக்கும்படி செய்து, அதை வெளியிடுவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது மூலிகைகள் பயிரிடுவதைப் பற்றியது. விஸ்தரிக்கப்பட்டுத் தான் வருகிறது. இப்பொழுது இரட்டிப்பாகச் செய்து வருகிறோம்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : என்னென்ன பச்சிலைகளைத் தயாரித்து வருகிறார்கள் என்ற பட்டியலை சபை முன்பு வைக்க கனம் அமைச்சர் அவர்கள் முன்வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : " மூலிகைகள் " என்று சொல்லுகிறார்களே, அந்தச் செடிகளை வளர்க்கிறோம். (சிரிப்பு.)

SRI K. B. S. MANI : பண்டைக் காலத்தில் அகஸ்தியர் ? யாகூப் போன்ற பெரிய முனிவர்கள் இந்தப் பச்சிலைகளை வளர்க்கும் தத்துவ முறையை எழுதி வைத்திருக்கிறார்கள். அவர்கள் கூறியுள்ள தத்துவ முறைப்படி, ஆகமங்களின்படி அவைகளை மருந்திலே சேர்த்தால் தான் சரியாக வேலை செய்யும். அந்தத் தத்துவ முறைப்படி அரசாங் கத்தால் வளர்க்கப்படுகிற பச்சிலைகள் வளர்க்கப்படுகின்றனவா, அந்த முறைப்படி மருந்துகள் தயாரிக்கப்படுகின்றனவா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : மூலிகைகளைக் கொண்டு மருந்துகளைச் செய்வது முறைப்படி செய்யவேண்டும். செடியை வைத்திய முறைப்படி வளர்ப்பதற்கு இதுவரையிலும் சாஸ்திரம் கண்டுப்பிடித்த தாகத் தெரியவில்லை. (சிரிப்பு.)

MR. SPEAKER : இன்னும் ஐந்து நிமிஷங்கள்தான் இருக்கின் றன. ஆகையால் மூலக் கேள்விகளுக்கு மட்டும் பதில்கள் அளிக்கப்படும். அடுத்த கேள்வி . . . .

SRI A. GOVINDASAMY : உப கேள்விகள் கேட்பதற்காகத் தான் மூல கேள்விகள் போடப்படுகின்றன. ஆகையால் இவைகளை நாளைக்கு எடுத்துக் கொள்ளலாமென்று வேண்டிக் கொள்கிறேன்.

MR. SPEAKER : நாளைக்கும் கேள்விகள் பாக்கி இருக்கும். முக்கியமான கேள்வியாக இருந்தால் உப கேள்விகள் போடுவதற்கு நானே அனுமதித்து வருகிறேன்.

*Construction of houses for Harijans of Salem Town*

* 790-J *Q.*—SRI A. MARIAPPAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சேலம் நகரிலுள்ள ஹரிஜனங்கள் தங்களுக்கு வீடு கட்டிக் கொடுக்க வேண்டுமென்று விண்ணப்பங்கள் கொடுத்திருக்கிறார்களா ?

(ஆ) அப்படி கொடுத்திருந்தால், அவை மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir. The Salem Harijans Munnetra Sangam has given a representation on behalf of the Harijans of Narayanaswamipuram.

(*b*) The Harijan Housing Scheme is not at present implemented in urban areas. Hence no action can be taken on the request. The question of acquisition of lands for house-sites to the Harijans of Narayanaswamipuram is, however, under consideration.